உ

சிவமயம்.

# துறவி

1954


| விஜய மலர் 1 | திங்கள் வெளியீடு | புரட்டாசி ஐப்பசி இதழ் 2,3. |
|---|---|---|





## தமிழ்நாட்டுத் துறவிகள் சங்கம்,
திருவண்ணாமலை.

---

"பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"


பதிப்பாளர்:

சுவாமி. ஞானானந்தா.

சின்னமடம், எறும்பூர்.

வளையமாதேவி P. O. சிதம்பரம் தாலுக்கா.

வருட சந்தா ரூ. 2—0—0.

ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் வாரத்தில் வெளிவரும்

# பொருளடக்கம்.

---



---

உ

## 'துறவி'

நேயர்களுக்குத் தெரிவித்துக்கொள்வதாவது, பதிப்பாளரவர்கள் உடல்நலக் குறைவால் புரட்டாசித் திங்கள் வெளியீட்டை வெளியிட முடியவில்லையாதலால், இத் திங்களில் அதையும் சேர்த்து வெளியிட்டிருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இங்ஙனம்,
சா. ந. சொருபானந்தன்,
செயலாளன்.

கீழ்ப்பாளூர், 
11—10—53.




உ

ஓம்

# துறவி

---

## கடவுள் வாழ்த்து.

"விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான்—விநாயகனே
விண்ணிற்கு மண்ணிற்கு நாதனுமாந் தன்மையினல்
கண்ணிற் பணிமின் கனிந்து."

"பேரா யிரம்பரவி வானோ ரேத்தும்
பெம்மானைப் பிரிவிலா அடியார்க் கென்றும்
வாராத செல்வம் வருவிப் பானை
மந்திரமும் தந்திரமும் மருந்து மாகித்
தீராநோய் தீர்த்தருள வல்லான் றன்னைத்
திரிபுரங்கள் தீயெழத்திண் சிலைகைக் கொண்ட
போரானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றுதே யாற்றநாள் போக்கி னேனே."

"தூயதமிழ் நாட்டுத் துறவிகள் சங்கமென்றும்
ஞாயிறுபோன் மக்களுக்கு நன்மைசெயத்—தாயாகும்
உண்ணு முலையாம் உமைசே ரொளிப்பிழம்பாம்
அண்ணு மலைதுணையா மால்."

---

௨

# இறைபணி நிற்றல்

பதிப்பாளர்.

(முன் தொடர்ச்சி)

மனிதனிடம் காணப்படும் சில தெய்வீகக் குணங்களுள், அன்பு என்பது முக்கியமானது. அன்பு என்கின்ற வன்மையான படைகொண்டு பகையாகிய எத்தகைய தீமைகளையும் வெல்ல இயலும்.

காரைக்காலம்மையாரும் தாம் இறைவனிடம் கேட்ட வரங்களுள் "இவ் விறவாத இன்ப அன்பைத்தான்" முதலாம் வரமாகக் கேட்டதாக அறிகின்றோம்.

இவ்வித இறவாத இன்ப அன்பை நாள்தோறும் காணும் உயிர்களிடத்தே செலுத்தப் பழகி வந்தால்தான், காணாத இறைவனை உணரும்போது அவ்விறைவனிடத்தில், இத்தகைய அன்பையே செலுத்த இயலும் என்பது நன்கு புலனாவதொன்று. ஒருவன் தன்னுள்ளம் அறியப் பிறருயிர்க்குத் துன்பம் செய்வானேயானால் அவன் மன அமைதியுடன் இறைவனிடம் அன்பு செலுத்த இயலாது. ஏனெனில்,

"தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்."

என்ற திருக்குறளின்படி நாம் அறிந்து செய்த குற்றத்தை யாரும் பார்த்துத் தண்டிக்காவிட்டாலும் நம் உள்ளமே (Conseience, நம்மை வாட்டும்.

இறைவனது இணையடிகளை அடைய விரைந்து செல்லும் அடியார்களனைவரும் ஏனைய உயிர்கட்கு நன்மையைச் செய்யாவிடினும், தீமையை மனத்தேயும் எண்ணாதிருத்தல் நலம். இவ்வுண்மையைப் பண்டைக்காலத்துச் சங்கப் புலவரொருவர் மிகத் தெளிவாக விளக்கியுள்ளார்.

அவர் உலகத்தாரைப் பார்த்து, பல நற்குணங்களையுடையீரே என்று ஏளனமாக இருமுறை விளித்து, நீங்கள் இறக்கும் வேளையில்தான் "நாம் இதுவரை எவ்வளவு தீமைகளைச் செய்துவிட்டோம்" என்று இரங்குவீர்கள். ஆதலால், நீங்கள் இப்போதே பிறர்க்கு நன்மையைச் செய்யாவிடினும்,

அவர்களுக்குத் தீமையைச் செய்தலையேனும் தவிர்வீர்களாக; அதைத்தான் எல்லோரும் புகழ்வார்கள். அன்றியும், அது தான் உங்களை நல்ல நெறியிலே செலுத்தவும் பெருந் துணை புரியும் என்று அவர் கூறுகின்றார்.

"பல்சான் றீரே! பல்சான் றீரே!
கயன்முள் என்ன நரைமுதிர் திரைகவுள்
பயனின் மூப்பின் பல்சான் றீரே!
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்
பிணிக்குங் காலை இரங்குவிர்! மாதோ
நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்
எல்லாரும் உவப்பது, அன்றியும்
நல்லாற்றுப் படூஉம் நெறியுமா ரதுவே."

என்பது 'நரிவெரூஉத்தலையார்' என்ற சங்கப் புலவரின் புறநானூற்றுச் செய்யுள், நிற்க,

இறை வழிபாட்டில் ஈடுபட்டு இறைவனது இயல்பை நன்கறிந்து, அவனை அகக்கண் கொண்டு அநுபவித்த பெரியோர் கணக்கிலர். பொதுவாக இறைவனை உணர்தற் குரிய நிலைகளைச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான் காக வகுத்துள்ளார்கள். இந்நிலைகளில் நிற்போர், இறைவனை முறையே உருவத்திலும், அருவுருவத்திலும், அருவத்திலும் வழிபடுதலைச் சிவஞானபாடியத்தில் எட்டாஞ் சூத்திரத்தின் விளக்கத்தில் ஆசிரியர் நன்கு விளக்கியுள்ளார்.

இறைவனால் கொடுக்கப்பட்ட இவ்வுடம்பு கொண்டு அவனடியார்க்கு ஆற்றும் தொண்டு, முதல் நிலையாகிய சரியை யாகும். உடம்பின் உறுப்புக்களுள் சிறந்த தலை முதலியவை கட்குப் பற்பல தொழில்களிருப்பினும், அவைகளுக்குச் சிறப்பாய தொழில் இறைவனைக் காணுதல், வணங்குதல், வாழ்த்துதல், திருக்கோயில் வலம் வருதல், பூமாலை புனைந் தேத்தல் ஆகியவையே. திருநாவுக்கரசு சுவாமிகள் திரு அங்க மாலையிலே இதை நன்றாக விளக்கியுள்ளார்.

"தலையே! நீ தலைவனை வணங்கு; கண்காள்! அவனது அருளுருவத்தைக் கண்டு களியுங்கள்; செவிகாள்! அவனருட் டிறனைப்பற்றி எப்போதும் கேளுங்கள்; வாயே! எம்பிரானை வாழ்த்து; கைகாள்! கூப்பித் தொழுவீர்" என்று இவ்வாறு ஒவ்வொரு உறுப்புக்கும் அதனதன் சிறப்புப் பணியை விதிக் கின்றார்கள். இத்தகைய தொண்டு எவராலும் செய்தத்தக்கது.

இந் நிலைக்கு அடுத்த நிலை கிரியையாகும். இந்நிலையில் உடலும் மனமும் ஒன்றி நின்று இறைவனை அருவுருவத்தில் உள்ளும் புறனும் வணங்குதலாகும். மேற்கூறிய திரு அங்க மாலையிலேயே நமது அப்பர் சுவாமிகள் "நெஞ்சே! நிமிர் புன் சடை நின்மலனை நீ நினையாய்" என்று இவ் விரண்டாம் நிலையையும் விளக்கியுள்ளார். இவர்களே மற்றுமோரிடத்தில் "வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும் — தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனை" என்று கூறியுள்ளார்கள். நம் மணிவாசகப் பெருமானே, வாழ்த்த வாய், நினைக்க நெஞ்சு, தாழ்த்தத் தலை முதலியவைகளோடு, நாம் உய்தற்பொருட்டு இறைவன் நம்மிடையே மற்றொரு பொருளையுந் தந்துள்ளார் என்று கூறுகின்றார்; அது யாதெனில்- மெய்யடியார்களது திருக்கூட்டமாகும்.

"வணங்கத் தலைவைத்து வார்கழல்கள் வாழ்த்தவைத்து
இணங்கத்தன் சீரடியார் கூட்டமும் வைத்து"

என்பது அப்பெருமானது திருவாக்கு.

மனிதன் எதைச் சார்ந்து நிற்கின்றானோ அப்பொருளின் இயல்பையே தன்னையுமறியாது எய்துகின்றான். நல்லோரைச் சார்ந்தபோது நற்குணமுடையவர்களாயும், தீயவரை அடுத்த போது தீயவர்களாயும் ஆகிவிடுதல் இயல்பு. ஆதலால், ஒவ்வொருவரும் நல்லாரிணக்கத்தையே நாடுதல் நலம் பயக்கும்.

நமது தாயுமானப் பெருமானும்,

"தெய்வ நல்லருள் படைத்த அன்பரோடு
சேரவும் கருணை கூர்வையோ"

என்று இறைவனிடம் இக்கருத்துக் கொண்டே விண்ணப்பித்துள்ளார்கள். பட்டினத்தடிகளும்,

"நல்லா ரிணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே
அல்லாது வேறு நிலையுளதோ"

என்று கூறிய இடத்தில் இறை வழிபாட்டில் அன்புடைமைக்கும் முன்னதாக நல்லா ரிணக்கத்தைக் கூறியிருத்தல் அறியற்பாலது. எனவே, நல்லா ரிணக்கமும் சரியை கிரியை என்ற நிலைகளினுள்ளேயே அடங்கும் என்பது புலனாகின்றது. நமது வாழ்நாட்களில் ஒவ்வொரு நாளிலும் கடவுளை வணங்குதற்கென ஒரு சிறு பொழுதையேனும் ஒதுக்கி வைத்தல்

வேண்டும். காலையிலும் மாலையிலும் அரைமணி நேரமாவது அல்லது சில நிமிடங்களாவது மன அமைதியுடன் இறைவனது பற்பல உருவங்களுள் நமக்குகந்த அருளுருவத்தில் அவ்விறைவனைச் சிந்தித்து உள்ளம் உருகத் தோத்திரப் பாடல்களால் துதித்து அவனை வழிபடுதல் வேண்டும்.

இவ்வாறு நாம் இடைவிடாது செய்யும் வழிபாட்டால் மிகுந்த செல்வ முதலிய பொருள்களை நாம் விரும்பியவாறே பெறுமற் போகலாம். ஆனால் எவ்வளவு செல்வம் கொடுக்கத் தயாராயிருந்தாலும், அதற்கு மாறாகப் பெறமுடியாத பொருள்களான, மன அமைதியையும், பாபச் செயல்கள் நம்மையணுகாதவாறு நம்மைக் காத்துக் கொள்ள ஒருவித ஆற்றலையும், இன்னும் இறைவன் நமக்கு எதை அளித்தாலும் அதை விருப்புடன் ஏற்றுக்கொள்வதற்குரியதோர் ஆற்றலையும் இத்தகைய இறைவழி பாட்டால் பெறுவோமென்பதில் ஐயமில்லை. இவ்விதமாக உடலும் மனமுங் கொண்டு சரியை கிரியை என்ற இருநிலைகளிலும் நிலைத்து நின்றபின்னர்த்தான் மூன்றும் நிலையாகிய யோக நிலையை அடைதல் கூடும் என்று நான்முகமாக அறிகின்றோம்.

மூன்றும் நிலையாகிய யோக நிலை இறைவனை அகவுணர்ச்சி கொண்டு, இதுவரை விரிந்து கிடந்த மனத்தை ஒடுக்கத்திற்குக் கொண்டுவர நிஷ்டை கூடுதல் முதலியவைகளைப் பயிலுதலாம் இந்நிலையையுற்ற பெரியோர்கள் முன்னரே சரியை கிரியைகளில் பழகியவர்களாதலால் அவர்கள் புறத்திற் செய்யும் பூஜை முதலியவைகளோடு அகத்தேயும் இறைவனைக்கண்டு வழிபட்டதாக அப் பெரியார்களது திருவாக்குகளே விளக்குகின்றன இந்த நிலையில் அவர்களது நெஞ்சத்தையே கோயிலாகக் கொண்டு இறைவனைக் கண்டு வழிபட்டுணர்ந்தார்கள். இதை நமது அப்பர் சுவாமிகள்

"நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்" என்றும்,

"உடம்பெனும் மனையகத்துள் உள்ளமே தகளியாக
மடம்படும் உணர் நெய்யட்டி உயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளைதாதை கழலடி காணலாமே"

என்றும், மற்றுமோரிடத்தில்

"காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறைய நீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈசனூர்க்குப் போற்றவிக் காட்டினோமே."

என்றும், மூன்றும் நிலையின் பெருமையை நன்கு விளக்கியுள்ளார்கள். ஆனால் இத்தகைய மேலான அகப்பூஜை, சரியை கிரியை என்ற இரு நிலைகளிலும் முறையே நின்று, பழகி, முற்றிய பின்னர் இந்தயோக நிலையை அடைந்தவர்களால்தான் செய்ய இயலும் என்பது அறியற்பாலது.

இம்மூன்று நிலைகளையும் முறையே கடந்த பிறகுதான் இறை ஞானம், அதாவது அவனை அறிந்து அப்பேரின்பத்தில் திளைத்தல் என்பது கைகூடும் என்று நான்முகமாக அறிகின்றோம்.

"தேடொணாத் தேவனை என்னுள்ளே
தேடிக் கண்டு கொண்டேன்"

என்ற நமது அப்பர் திருவாக்கில் "கண்டு கொண்டேன்" என்றது ஞானநிலையை விளக்குகின்றது. எனவே, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு நிலைகளும் ஒன்றன்பின் ஒன்றாகத்தான் நிகழ்தல் வேண்டும்.

"விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே"

என்ற நமது தாயுமான சுவாமிகளது மிகப் பொருத்தமான உவமைக் கிணங்கச் சரியை என்ற அரும்பு கிரியையாய் மலர்ந்து, யோகமாய்க் காய்த்து, தக்கபருவம் வந்த காலத்தே தான் அது பழுத்து மெய்ஞ்ஞானம் அல்லது இறைஞானம் என்றதொரு இனிய கனிகிடைக்கப்பெறும்.

எனவே சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நமது பெரியோர் காட்டிய நான்கு நிலைகளிலும் முறையே நின்று இறைவனது ஞானத்தை அடைய முயலுதலே சிறந்ததொரு இறைவழிபாடாகும்.

"நிற்றல்" இனி, இத்தகைய இறைபணியில் "நிற்றல்" என்பது எவ்வாறு கைகூடும் என்பது பற்றிச்சிறிது ஆராய்வோம்.

ஏதோ நம் அறிவு கொண்டு அரிய நூல்களைப்படிப்பதும், பெரியோர்கள் வாயிலாகச் சில அரிய பொருள்களை நமது மனதிற்பதியுமாறு கேட்பதும் எளியன. ஆனால் அறிந்த அவ் வழியே நமது வாழ்க்கையில் நிலைத்து நிற்றல்தான் அரிது. நமது வள்ளுவனாரும் "கல்வி" என்னும் அதிகாரத்தில் முதலாம் குறட்பாவிலேயே

"கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத்தக"

என்று கூறியுள்ளார். சிறிதளவு படித்தாலும் அதைக் குற்ற மறத்தக்க பெரியார் மூலம் உள்ள பொருளறிந்து கற்றல் வேண்டும், என்பதே அவர் கருத்து. இறைபணியில் நிற்றற்கும் இப்பாவே துணைபுரியும்.

இறைபணி நிற்றல் என்பது, இறைவனது அருள் வழியில் தளராது நிற்றல் என்றும் பொருள்படும். முதலில் செயல்களனைத்தும் இறைவனது அருட்செயல்களே எனக் கருதுதல் வேண்டும். நமது செயல், நாம் செய்தோம் என்ற நினைவுகள் நீங்குதல் வேண்டும்.

"சந்ததமும் எனது செயல் நினது செயல்" என்றும்,

"பாராதி தனிலுள்ள செயலெலாம் முடிவிலே
பார்க்கில் நின்செயலல்லவோ"

என்றும் நமது தாயுமானப் பெருமான் கூறியுள்ளார்.

எனவே, நாம் செய்தோம், நமது செயல் என்ற எண்ணங்கள் நீங்கப்பெறுவதே இறைபணியிற் றளராது நிற்றற்குச் சிறந்த நெறியாகும். இதைச் சிதம்பர சுவாமிகளும் தாமியற்றிய திருப்போரூர்ச் சந்நிதி முறையிலே வண்ணத் தாழிசை என்ற பகுதியில்,

"எண்ணும் செயலாயும் எழிலுடலின் செயலாயும்
யாதாயினும் நாவார இசைக்குஞ் செயலாயும்
நண்ணும் செயல்வருதோறு நின்னருளின் செயலாக
நாடும்செயல் என்றேவரும் நாயேன்செயல் போயே"

என்று மிகத் தெளிவாகக் கூறுகின்றனர். எண்ணும் செயல், நாவார இசைக்குஞ் செயல், உடலின் செயல், என்றதால்

மனம் வாக்கு காயம் என்ற முக்கரணங்களும் தொழிற்படும் போது, அவற்றின் செயல்களெல்லாம் இறைவன் உணர்ச்சி யோடேயே நிகழ்தல் வேண்டும் என்பது பெறப்பட்டது.

மக்களுட் சிலர், செல்வ முதலிவை பெற்றபோதுமட்டும் இறை வழிபாடு ஆற்றியும், அந்நிலை மாறியபோது அவ் விறை வனையே நிந்தித்தும், ஆலய வழிபாடு முதலியவைகளைக் கைவிட்டும் வருகின்றனர். வேறு சிலர் உலக இன்பங்களிலேயே மூழ்கிக் கிடக்கும் நிலையில், தலைவனது நினைவே சற்றும் இராம லிருந்து திடீரெனத் துன்பம் வந்துழி இறைவனை இடைவிடாது வழிபடுதலையுங் காண்கின்றோம். இறைபணி நிற்போர்க்கு இத் தகைய தளர்ச்சி வரலாகாது என்றே நமது முன்னோர்களும் தாமியற்றிய நூல்களிலே ஆங்காங்குத் தளராமையைப்பற்றிப் பேசியுள்ளனர்.

"மலையே வந்து வீழினும் மனிதர்காள்
நிலையில் நின்று கலங்கப் பெறுதிரேல்"

என்று அப்பர் சுவாமிகள் நம்மை விளித்து, இத்தளராமையை நமக்கு அறிவுறுத்துகின்றார்.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளும்,

"இடரினும் தளரினும் என துறுநோய்
தொடரினு முனகழல் தொழுதெழு வேன்"

என்று தொடங்கும் திருப்பதிகத்தின் ஒவ்வொரு பாட்டின் முதலடிகளிலும் தளராமை பற்றியே வற்புறுத்தியுள்ளார்கள். இத்தளராமையைப் பெறுவதற்கு இறைவனை என்றும் மறவாமையே துணைபுரியும்.

எனவே, இறைபணியிற் செவ்வனே நிற்றற்கும் பெருந் துணையாயிருப்பவை இறைவனிடத்துப் பூரண அன்பும், அவ் வன்பில் தளராமையும், அவனை என்றும் மறவாமையும் ஆகும்.

" பயன் " முதலாவதாக, பிறஉயிர்களின் நன்மைக்காகச் செய்யும் தொண்டால் வரும் இன்பமே அத்தொண்டால் நாம் பெறும் முதற்பயனாகும்.

(The pleasure of service is its own reward) பிற உயிர் களுக்குத் தொண்டு செய்தால் இத்தகைய இன்பம் தானே

வந்து நம்மை அடையும் என்றதொரு அழகிய கருத்தை நமது தாயுமானாரும்,

"அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே"

என்ற அடிகளால் விளக்கியுள்ளார். இன்னும், மெய்கண்டார் நூலின் பத்தாம் சூத்திரத்தின் இறுதியில் "இறைபணி நிற்க, மலமாயை தன்னொடு வல்வினை இன்றே" என்று இறை பணி நிற்றலின் பயனைக் கூறியுள்ளார்கள். ஆகையால், இறைவ னொடு ஒன்றியே எப்பணியையும் ஆற்றும் அடியார்களுக்கு முதலாவதாக, மலங்களுள் பெரிதாகிய ஆணவ மலமும், மாயையும் நீங்கிவிடுகின்றன. இன்னும் கன்மம் எவ்வாறு நீங்கும் என்பதைப் பார்ப்போம். இறைபணி நிற்போர், இறைவனது அருள் வழியிலேயே நிற்றலால் அவர்களுக்கு இனி வர இருக்கும் வினையாகிய ஆகாமியம் நீங்குகின்றது.

இறைவனது அருள் நோக்கத்தால் முற்பிறவிகளில் செய்த பழவினைகளின் கூட்டமான சஞ்சிதமும், தீப்பட்ட பஞ்சுப்பொதி போல் எரிக்கப்படுகின்றது. இன்னும் இறைபணி நிற்போர், அவ் விறைவனிடமிருந்து பெறும் ஒருவித ஆற்றலால், இப் பிறவியில் அநுபவித்தற்குரிய பிராரப்தத்தின் விளைவாகிய இன்ப துன்பங்களையும் பொருட்படுத்தமாட்டார்கள். இதை,

"அல்லல் என்செயும் அருவினை என்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என்செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க்
கெல்லை யில்லதோர் அடிமைபூண் டேனுக்கே"

என்ற தேவாரத்தில் நமது அப்பர் பெருமான் "அல்லல்" என்ற சொல்லால் பிராரப்த வினையின் விளைவையும், 'அருவினை' என்றதொரு மொழியால் ஆகாமிய வினையையும். "தொல்லை வல்வினைத் தொந்தம்" என்றதொரு தொடரால் சஞ்சித வினையையும் தூய தமிழ்மொழிகள் கொண்டே மிக அழகுபட எடுத்துக் கூறியுள்ளார்கள்.

இவ்வளவு வினைகளும் இறைபணி நிற்பார்க்கு எவ்வாறு ஒரே பிறவியில் நீங்குதல் கூடும்? என்று ஒரு வினா எழுமாயின், அதற்கு நமது தாயுமானப் பெருமான் தக்கதோர் உவமை கொண்டு விளக்குகின்றார்.

"காகமா னதுகோடி கூடுகின் ருலுமொரு
கல்லின்முன் எதிர்நிற்கு மோ
கர்மமா னதுகோடி முன்னேசெய் தாலுநின்
கருணைப்ர வாக அருளைத்
தாகமாய் நாடினரை வாதிக்க வல்லதோ"

என்பது அவரது திருவாக்கு. "தாகமாய் நாடினரை" என்ற தொடர் இங்கு அறியற்பாலது. எடுத்தாளப்பட்ட உவமையும் நாம் என்றும் காணும் ஒரு காட்சியே.

இன்னும் நமது சிதம்பர சுவாமிகளது திருவாக்காகிய "நோவ வுரையான் எம்மை நோவக்கண் பார்த்திடான்" என்ற உறுதிமொழிக் கிணங்க, இறைவனை நாடி அவனருளைப் பெற்ற வர்களுக்கு ஒருவிதத் துன்பமும் இராது. அதாவது, முன் செய்த வினையின் பயனாய்த் துன்பம் வந்தாலும் அதை அவர்கள் 'துன்பமாகக் கருதாதவாறு இறைவன் அவர்களுக்கு அருள் புரிவான். இறுதியாக எத்துறையிலும், மக்கள் துன்பம் ஒழிந்த இன்பத்தையே பயனாக அடைய விரும்புதல் இயல்பாதலால், நமது அப்பரின் உறுதிமொழிக் கிணங்க இறைபணி நிற்போர்க்கு, "இன்பமே எந்நாளும் துன்பமில்லை" என்றதுடன் 'பயன்' என்ற பகுதியை நிறுத்திக்கொண்டு அத்தகைய இன்பமே அங்கு இங்கு எனாதபடி எங்கும் நிலவுதல் வேண்டுமென இன்பமே வடிவாய இறைவனை வணங்குவோமாக.

---

# ஞானம்

தவத்திரு. நீலகண்ட சுவாமிகள்,
ஆனந்தாச்சிரமம், சென்னை.

**(முன் தொடர்ச்சி)**

முன்னர் விருத்தி ஞான மனத்தையும் இலக்ஷியமாகக் கொண்டு இலக்கணங் கூறப்பட்டவிடத்து, அவ்விலக்கணம் இம் முக்குற்றங்களுள் எதுவுமின்றிய நல்லிலக்கணம் எனப் பட்டது. அஃதெங்ஙனமெனின்?—

"அவித்தை அல்லது அந்தக்கரணத்தின் பரிணாமம்" என்பதை மாத்திரம் ஞானத்தின் இலக்கணமெனின், அவித்தையின் காரிய வடிவ பரிணாமம் ஆகாயமும், அந்தக்கர

ணத்தின் காரிய ரூப பரிணாமம் இன்பம், துன்பம், விருப்பு, வெறுப்பு முதலனவுமாம். அவை அறிவற்ற சடங்களாதலின் ஞானமாகா. ஞானமல்லாத அவற்றிலும் ஞானத்தின் இலக்கணம் இயைதலின், அதிவியாப்திக் குற்றமுடைத்து. அக்குற்றம் நீக்க அவ்விலக்கணத்திற்கு "விள்க்கவடிவ" என்னும் அடை (விசேடணம்) கொடுத்து, "விளக்க வடிவ அவித்தை அல்லது அந்தக்கரணத்தின் பரிணாமம்" எனல் வேண்டும். விளக்க வடிவம் என்பது விடயத்திலுள்ள அஞ்ஞானத்தைக் கெடுத்து அதனை விளக்கும் சொரூபமாம். ஞானத்தினால் விளக்கப்படுவது விடயம் எனப்படும்.

விடயமாகிய குடமோ அஞ்ஞான காரியம். காரியத்தில் அதன் முதற் காரணம் இராதென்பது நியமம். ஆகவே, குடமாகிய காரியத்தில் அதன் முதற் காரண அஞ்ஞானம் ஒருபோது மிராது. ஒன்றிருப்பதற்கு இடமாயுள்ளதை அதற்கு ஆசிரயம் என்பர். வெள்விடை என்புழி, வெண்மை நிறம் ஆசிரிதம். விடை (எருது) அந்நிற மிருத்தற்கு இடமாதலின் ஆசிரயமாம். ஆசிரயத்தைப்பற்றி ஆசிரிதமிருக்குமேயன்றி, ஆசிரிதத்தைப்பற்றி ஆசிரயம் ஒருபோது மிராது. வெண்மை நிறமாகிய ஆசிரிதம் விடையாகிய ஆசிரயத்தைப்பற்றி யிருக்குமேயன்றி, அவ் வெண்மை நிறத்தை ஆசிரயித்து ஒருபோது மிராமைபோலென்க.

ஆனால், அவ் வஞ்ஞானம் குடத்தின் அதிஷ்டானமாகிய குடாவச்சின்ன சேதனத்தைப் பற்றியிருக்கும். அதிட்டானமெனினும், விவர்த்த உபாதான காரணமெனினும் ஒக்கும். எப்பொருள் எதன் ஞானத்தால் பொய்யென்று நிச்சயிக்கப்படுமோ அப்பொருட்கு அது அதிஷ்டானமாம். கற்பித பாம்பிற்குக் கயிறு, அல்லது கயிற்றவச்சின்ன சேதனம் அதிஷ்டானமாதல் போலாம். குடாவச்சின்ன சேதனம் அக்குடமாகிய காரியத்திற்கு விவர்த்த உபாதான காரணமாம். அக்குடத்திற்கு அதிஷ்டானமென்பதும் அதுவே. வி=வேறாக; வர்த்தம்= இருத்தல்; அதாவது உபாதான காரணம் எவ்வித விகாரமுமடையாதிருக்க, அதன்கண் விகார வடிவ காரியம் தோற்றுவதாம். அது, கயிறு எவ்வித விகாரமுமடையாதிருக்க, அதனிடத்துப் பாம்பாகிய விகார காரியம் தோற்றுதல் போலாம். பாம்பு விவர்த்த காரியமாம்.

அதிஷ்டானத்தின் விஷம (வேற்றுச்) சத்தை (இருப்பு) உடைய வேற்று வடிவம் விவர்த்த காரியம் எனப்படும். கற்பிதப் பாம்பிற்கு அதிஷ்டானமாகிய கயிற்றவச்சின்ன சேதனம் பாரமார்த்திக சத்தை (இருப்பு) உடையது. அதன் விவர்த்தகாரியப் பாம்போ அதற்கு வேருன பிராதி பாசிக சத்தையுடையது.

ஒரு கற்பித, அல்லது சடப்பொருள் மற்ருெரு கற்பிதப் பொருளுக்கு, அதிஷ்டானமாகாதென்பது நியமம். ஆதலால், அப் பாம்பிற்கு அக் கயிறு அதிஷ்டானமாகாது. என்ருலும், கயிற்றவச்சின்ன (வரையப்பட்ட) சேதனத்திற்கு அக் கயிறு அவச்சேதகமா (வரைவதா) யிருத்தலால், அச் சம்பந்தங் கொண்டு அக் கயிற்றுக்கும் அவ் வதிஷ்டானப் பெயர் வழக்குத் தூலநோக்கால் உபசாரமாம். இங்ஙன் கயிற்றை அதிஷ்டானமாகக் கொள்ளின், அக் கயிறு வியாவகாரிக சத்தையுடையது. அப் பாம்போ அதற்கு வேருன பிராதிபாசிக சத்தையுடையது. எனவே, விவர்த்த இலக்கணம் அவற்றிற் பொருந்துவது காண்க.

அடர்ந்த இராப்போதில், வெந்த கரிக்கட்டை, விளக் கிரண்டனையும் நெருங்கவைத்து, விளக்கை மாத்திரம் ஒளி சிறிதும் வெளித் தோன்ருமல் ஒரு கரிச்சட்டியால் நன்கு மூடிடின், அவ் வறை வாயில் நின்று பார்ப்பவ ரெவர்க்கும் அக் கரிக்கட்டை சிறிதும் புலப்படாது. ஆனுல், கழியொன்று கொண்டு அக் கரிச்சட்டியை அடித்துடைத் தகற்றின், அவ்விளக்கு மறைப் பற்றதாய் விளங்குவதுமன்றி, அக் கரிக்கட்டையையும் விளக்குவதாகும். அதுபோலக், குடமாகிய கரிக்கட்டையை விளக்காவாறு, குடாவச்சின்ன சேதனமாகிய விளக்கு அஞ்ஞானமாகிய கரிச்சட்டியால் மூடப்பட்டுளது. அவ் வஞ்ஞானக் கரிச்சட்டியை, அந்தக்கரணத்தின் பரிணுமரூப விருத்திஞானம், அதாவது அச் சேதன சகித விருத்திஞான மென்னுங் தடி கொண்டு உடைத்தொழிக்கின், அக் குடாவச்சின்ன சேதனமாகிய விளக்கு மறைப்பற்றதாய் விளங்குவதுமன்றி, அக் குடமாங் கரிக்கட்டையையும் விளக்குவதாகும்.

இங்ஙன் குடாவச்சின்ன (குடத்தால் வளைபட்ட) சேதனத்தை ஆசிரயித்து (இருப்பிடமாகக் கொண்டு) அதனையே மறைக்கும் அஞ்ஞானம் அச் சேதனத்தின் அவச்சேதகமாங்

(வரைவதாங்) குடத்தில், அச் சம்பந்தத்தாலிருந்து அதனை மறைக்கின்றதென்னும் வழக்கு உபசாரமேயன்றி உண்மை யன்று.

ஆகவே, விஷயத்தை விளக்கும் அவித்தை அல்லது அந்தக்கரணத்தின் பரிணாமரூப விருத்தி சேதனம், அல்லது அச் சேதன சகித விருத்தியே ஞானமெனின், அது,'கண்ணின் சம்பந்தமுற்ற குடத்தின் வடிவையடைந்த அந்தக்கரண விருத்தி, அக் குடாவச்சின்ன சேதனத்துள்ள அஞ்ஞானத்தை அழிக்கும் வாயிலாக அக் குடத்தை விளக்குவதாகலின், இந்த ஞானமாகிய இலக்ஷியத்தில் அவ்விலக்கணம் பொருந்தும்,

ஆயினும், சுக துக்க ஞான வடிவ விருத்தியிலும், மாயா விருத்தி ரூப ஈசனது ஞானத்திலும், இப்பி வெள்ளி ஞான மாகிய பிராந்தி ரூப அவித்தையாவிருத்தியிலும், சொப்பன விஷய ஞானத்திலும், தூக்கத்தின்கண் ணுள்ள சுகத்தினையும், அஞ்ஞானத்தினையும் அறிவதாகிய அவித்தையாவிருத்தி வடிவ ஞானத்திலும், முன்கண்ட "அந்த யானையே இந்தயானை" என உண்டாம் பிரத்திய பிஞ்ஞை ஞானத்திலும் முற்கூறிய ஞான இலக்கணத்திற்கு அவ் வியாப்திக் குற்றமுண்டு. அதனைக் காட்டுவாம்.

முன் எந்த ஞானத்தினாலும் அறியப்படாமல், சுக துக்காதி கள் உற்பத்தியாய்ச் சிலபோதிருந்து பின்னுண்டாம் ஞானத் தினால் அறியப்படுமாயின், அச் சுகாதி விடயங்களை விளக்கா வாறு மறைப்பதாகிய அஞ்ஞானத்தை, அதாவது அச் சுகாதி களால் அவச்சின்ன (வரையப்பட்ட) சேதனத்திலுள்ள அஞ் ஞானத்தை அந்த விருத்திஞானம் கெடுத்து அவற்றை விளக்கல் பொருந்தும்.

. ஆனால், சுக துக்கங்களும், அவற்றின் ஞானமும், முன் பின் இன்றி ஒரேகாலத் துண்டாகின்றமையின், அச் சுகாதி கள் ஒரு கணமாயினும் அஞ்ஞான மறைப்புடையனவல்ல. ஆகவே, அவற்றின் ஞானத்தில் அஞ்ஞான நிவிர்த்தி வாயி லாய் விளக்குந் தன்மை யிலக்கணமின்மையின் அவ் வியாப்திக் குற்றமுண்டு.

இனி, ஈசனுக் குளதாம் மாயாவிருத்தி வடிவ ஞானத்தால், பதார்த்த மனைத்தும் சிறப்பியல்பாற் பிரத்யக்ஷமாகின்றன. எத்திறப் பொருளின் அஞ்ஞானமும் அவனுக்கு என்றுமின்று,

எனவே, அந்த ஞானத்தில், அஞ்ஞான நிவிர்த்தி வாயிலாக விடயத்தை விளக்கும் தன்மை இலக்கணம் இன்மையின், அவ் வியாப்திக் குற்றமுண்டு.

இன்னும், இப்பி வெள்ளி முதலியவும், கனவிலுள்ள கற்பித பதார்த்தங்களும், அவற்றின் ஞானமும் ஒரேகாலத் துண்டாகின்றன வாகலின், அவை அஞ்ஞாதமாய் (அறியப் படாததாய்) இமைப்போது மிருத்தலில்லை. ஆகவே, அந்த ஞானங்களில், அஞ்ஞான நிவிர்த்தி வாயிலாய் விடயத்தை விளக்கும் தன்மை யிலக்கண மின்மையின் அவ்வியாப்திக் குற்ற முண்டு.

பின்னும், துயிலும்போதுள்ள அவித்தையா விருத்தி ஞானம், ஆண்டுள்ள அஞ்ஞானத்தையும், ஆன்ம சுகத்தையும் விளக்குவதாம். அஞ்ஞான்று, ஒரு கணமாயினும் விளங்கா திருந்து பின், அவ் விருத்தி ஞானத்தினால் விளங்குவனவல்ல. ஆகவே, அந்த ஞானத்தில், அஞ்ஞான நிவிர்த்தி வாயிலாய் விடயத்தை விளக்கும் தன்மை யிலக்கண மின்மையின், அவ் வியாப்திக் குற்றமுண்டு.

மேலும், பிரத்தியக்ஷ சாமக்கிரியோடு (கரணமாகிய இந்திரியத்தோடு) கூடிய சம்ஸ்காரத்தால் (வாசனையால்) உண்டாம் ஞானம் பிரத்திய பிஞ்ஞை என்னும் பிரத்தியக்ஷ ஞானமாம். அதன் சொருபம் "அந்த யானையே இந்த யானை" என்றற் றொடக்கத்தனவாம். அதாவது, யான் நேற்றுக் கோயிலிற் கண்ட அந்த யானையே இப்போது இத்தெருவிற் செல்கின்ற இந்த யானை என்பதாம். ஈண்டு இந்த ஞானத்தின் விடய மாகிய யானை முன்னர் அறியப்பட்டதாகலின் அறியப்படாமைக் கேதுவாகிய அஞ்ஞானம் அதில் இல்லை. எனவே, அஞ்ஞான நிவிர்த்தி வாயிலாய் விடயத்தை விளக்கும் தன்மையாய இலக் கணம் அந்த ஞானத் தின்மையின் அவ்வியாப்திக்குற்றமுண்டு.

ஈண்டுச் சாமக்கிரி என்றது என்னை எனின், சமக்கிர சாதனமுடையது சாமக்கிரி எனப்படும். சமக்கிர=எல்லா; சாதனம்=கருவி. அதாவது, ஒரு காரியத்தை ஆக்கற்குரிய கரணத்திற்குச் (சிறந்த காரணத்திற்குச்) சககாரி (துணை) யாக, எத்துணைச் சாதனங்கள் வேண்டுமோ அத் துணைச்சாதனங் களும் குறைவின்றி நிறையப் பெற்ற அச் சிறந்த காரணம் சாமக்கிரி எனப்படும்.

அது, குடத்தின் பிரத்தியக்ஷ ஞானமாகிய காரியத்தினை ஆக்கற்குக் கரண (சிறந்த காரண) மாகிய கண்ணிந்திரியத்திற்குச் சககாரி (துணை) யாய இந்திரிய விடய சம்பந்தம், அதாவது குற்றமற்ற கண்ணிற்கு யோக்கிய குடத்தோடுள்ள சையோக சம்பந்தம் குடமாகிய விடயத்திலுள்ள மகத்துவ பரிமாணத்தோடு (பெரிய அளவோடு) கூடிய உற்பூத (வெளிப்பட்ட) உருவம், ஒளியின் சம்பந்தம், அக் குடாகார அந்தக்கரண விருத்தியாதியாக, அக் காரியத்திற்கு இன்றியமையாது வேண்டப்படும் சாதனங் (கருவி) களனைத்தும் குறைவின்றி நிறையப் பெற்ற கரண (சிறந்த காரண) மாகிய கண்ணிந்திரியம் சாமக்கிரியாதல் போலாம். இது நிற்க;

மற்றும், "இது குடம், இது குடம், இது குடம்" எனத் தாரை (வரிசை) யாக உண்டாகும் ஞானங்களில், இரண்டாவது முதலிய ஞானங்கட்கு விடயமாகிய குடம், முதல் ஞானத்தால் அறியப்பட்டமையின், இரண்டாவது முதலிய ஞான காலத்து, அக் குடத்தின் மறைப்பிற்குரிய அஞ்ஞானமில்லை. ஆகவே, அவ்விரண்டாவது முதலிய ஞானங்களில் அஞ்ஞான நிவிர்த்தி வாயிலாக விடயத்தை விளக்குந் தன்மையாய இலக்கண மின்மையின் அவ்வியாப்திக் குற்றமுண்டு.

எனவே, மேற்காட்டிய அவ்வியாப்திக் குற்றத்தை நிவிர்த்திப்பான், அந்த ஞான இலக்கணத்திற்கு, அவ்வடையை (விசேஷணத்தை) நீக்கி வேறு அடை கொடுத்து, "இருக்கிறது என்னும் வியவகாரத்திற்கு ஏதுவாய அவித்தை, அல்லது அந்தக்கரணத்தின் பரிணம (விகார) வடிவ விருத்தி சகித சேதனம், அல்லது அச் சேதனசகித விருத்தி" என்பது விருத்தி ஞானத்தின் இலக்கணமாம். இது இலக்ஷியமாகிய பரோக்ஷ, அபரோக்ஷ, சிவ, ஈசுரஞானம் முதலிய எல்லா விருத்தி ஞானங்களிலும் இயைவதாலும், விருத்திஞான மல்லாத அலக்ஷியம் எவற்றினும் இயையாமையானும், மேற்கூறிய அதிவியாப்தியாதி எக்குற்றமுமின்மையின், நல்லிலக்கணமாதல் காண்க.

தொடரும்

# கொல்லாமை

பண்டித சித. நாராயணசாமி,
அறுபத்துமூவர் மடம், திருவையாறு.

(முன் தொடர்ச்சி)

மாணவர்— கொலையினால் வரும் பாவம் (மறம்) என்ன செய்யும்?

ஆசிரியர்— நெடுங்காலம் விட்டு நீங்காத பெரிய துன்பங்களைத் தரும்.

மாண.— அப்படியானால், ஒருவன் கொலை செய்தவுடனே அதனால் வரும் துன்பத்தை யவன் நுகரக் கண்டிலமே?

ஆசி.— இம்மையில் உயிர்க்கொலை பண்ணினவன் இம்மையிலேயே துன்பங்களை நுகராவிடினும், உடல் மடிந்த பொழுது இன்னாத வுலகத்தை (நரகத்தை) யடைந்து பெரிய துன்பங்களை நுகர்வான். நுகர்வித்து எஞ்சிய பாவத்தால் (மறத்தால்) மண்ணுலகத்திலே மீண்டும் பிறந்து தொழுநோய் முதலிய நோய்களால் பல துன்பங்களையு நுகர்வான் என்பதே துணிபு. அஃ தெதுபோல என்றால், வேளாண்மை செய்த வொருவனுக்கு அவ்வேளாண்மையின் பயனானது கால முடிவிலுணவுமாகி, மேலைக்கு வித்துமானதுபோல எனக் கொள்க.

"அக்கே போலங்கை யொழிய விரலழுகித்
துக்கத் தொழுநோ யெழுபவே—அக்கால்
அலவனைக் காதலித்துக் கான்முறித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால்."

என்பது முதலிய சான்றோர் பாக்களையு நோக்குக.

மாண.— கொலைத் தீமையைச் செய்தவன் இன்னா வுலகத்திற் புகுந்து துன்பங்களை நுகர்ந்து நுகர்வித் தெஞ்சிய பாவத்தால் (மறத்தால்) மறுபிறவி யெடுத்துத் துன்பங்களை நுகர்வான் என்னுந் துணிவு எதனா லுண்டாயிற்று?

ஆசி.— ஒருவன் செய்த வலிய தீவினைகளானவை, செய்த வினை மறுமைக்கண் நரகத் துன்பத்தி லழுத்துமாயினும், இம்மையிலேயே கொடிய நோய்களையும், வறுமை முதலிய வற்றையும் புகுவித்துத் துன்புறுத்தும்படியான தம் வேகத்தைக் காட்டுமென மறைமொழிகள் கூறுதலாலும், அம் மறை

மொழிகளின்படி மிகுந்த பாவத்தின் * வேகமானது (விரைவாக வருத்து மாற்றலானது) செய்தவுடனே செய்தவனை வருத்தக் காணுதலானும், தீவினைகள் மறுமைக்கண் நரகத்திலழுத்தித் துன்புறுத்துமென்னும் துணிவுண்டாயிற்றென்று தெளிக. வலிய தீவினைகள் இம்மையிலே தம் வேகத்தால் துன்புறுத்து மென்பது,

"குற்றொருவரைக் கூறைகொண்டு கொலைகள்சூழ்ந்த களவெலாம்
செற்றொருவரைச் செய்ததீமைக ளிம்மையேவருந் திண்ணமே
மற்றொருவரைப் பற்றிலேன்மற வாதொழிமட நெஞ்சமே
புற்றரவுடைப் பெற்றமேறிப் புறம்பயந்தொழப் போதுமே"

—சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

"மிகமேவிய புண்ணிய பாவமெனும்
வினையின்பயன் மேலொரு காலமுறு
திகமேவரு மென்பதனு ளுளரோ
யெல்லாமிவ னெச்சேற வெய்தினவே"

—தத்துவராயர்.

என்பன முதலியவற்றாற் றெளிவுறுதல் காண்க. அப்படி யது கொல்லுவதற்கு முன்பே அவனுக்கு நெடிவு தோன்றும்படிச் செய்யும்; அவ்வாறு செய்யு மாற்றலை நஞ்சின்கண் ணுள்ள வேகமென்பர். நெருப்பு, தன்னாற் சூடுண்டானுக்குப் புண்ணை யுண்டாக்கும். புண்ணை யுண்டாக்கு முன்பே அவனுக்கு எரிவை யுண்டாக்கும். அவ்வாறு எரிவை யுண்டாக்கு மாற்றலை நெருப்பின்கண் ணுள்ள வேகமென்பர். அவ்வாறே வலிய தீவினைகளும் செய்தவனை மறுமைக்கண் நரகத்திலழுத்தும் அழுத்துமுன்பே அவை, செய்தவனுக்கு இம்மையிலேயே சித்தப்பிரமை (மருட்கொளல்) முதலிய துக்கங்களையும் மிரமகத்தியாதி துக்கங்களையும் உண்டாக்கும். அங்ஙனமுண் டாக்கு மாற்றலை அத் தீவினைகளின்கண் ணுள்ள வேகமென்பர்; என அறிக.

மாண.— இம்மையில், தீவினையைச் செய்தவன் இங்கேயே மாண்டுபோகிறான். மாளவும் அவனைச் சுட்டுவிடக் காண்கின் றனம். ஆகையால், இம்மையிலேயே ஒரு தீவினையைச் செய்த வன் மறுமையில் இன்னாத வுலகத்திற் புகுந்து துன்புறுவான் என்றல் எப்படிப் பொருந்தும் ?

---

* நஞ்சு தன்னை யுட்கொண்டானைக் கொல்லும்.

ஆசி.— நல்வினை தீவினைகளைச் செய்தவன், அவற்றின் பயன்களைத் துறக்க நரகங்களில் நுகர்வதற்கு உடல் முடிவில் பாவப்பருவ (மறப்பருவ) மானுல் பூத தேகத்தையும், புண்ணியப் பருவ (அறப்பருவ) மானுல் பூதசார தேகத்தையும், *கூற்றுவன் தூதர் ஒரு கணப்பொழுதி லுண்டாக்குவர். அந்த வுடல்கள் இன்ப துன்பங்களை நுகர்தலின், பொருந்துமா றறிக.

மாண.— ஒருவன் இம்மையிலே செய்த தீவினைப் பயனை, அவன் வாளா மடிந்துபோகவும், மறுமையில் கூற்றுவன் தூதர் படைத்த வுடம்பு நுகருமென்பது, குற்றஞ் செய்தவன் தப்பிப்போகக் குறுக்கே வந்தவன் வாயிலடித்தான், ஒருவன் பசி தீர மற்றொருவன் சோறுண்டான், என எள்ளி நகையாடு முறைகளுக்கு நிகராகுமன்றோ? தீவினைகளைச் செய்த வுடம்பு சும்மா வொழிய செய்யாத வுடம்பு துன்பப்படுமென்கின்றீர், அதற்கு மிதற்கு மென்ன பொருத்தமுள்ளது ?

ஆசி.— இவ்வுலகத்திலுள்ள வுடம்புகள் நல்வினை தீவினைகளைச் செய்தலுமில்லை; அவ்வுலகத்தில் யாதனு வுடம்புகள் இன்ப துன்பங்களை நுகர்தலுமில்லை. இவ்வுலக வுடம்பின்கண் ணுள்ள அறிவு, புண்ணிய பாவங்களை (அற மறங்களை) யுண்டாக்கு நல்வினை தீவினைகளை இவ்வுலக வுடம்பைக்கொண்டு படைக்கின்றது. இவ்வுடம்பி னொழிவில் யாதனு வுடம்பிற் புகுந்து, அதன் மூலமாக இன்ப துன்பங்களை நுகரும். இவ் வாறு அறிவு நுகருமென்பதை யறியாது உடம்பு நுகர்வதாக எண்ணி, செய்த உடம்பொழிய செய்யாத வுடம்பு எப்படி நுகரும்? இதற்கு மதற்குமுள்ள பொருத்தம் யாது என வினவல் பொருந்தாமை யறிக,

தொடரும்

---

# கல்வி

பொன், குமாரசுவாமி அடிகள்,
மெய்கண்டார் கழக ஆசிரியர், கணித சோதிடர், காஞ்சிபுரம்.

"சூரிய காந்தமுஞ் சூழ்பஞ்சும் போலவே
சூரிய காந்தஞ் சூழ்பஞ்சைச் சுட்டிடா
சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோல்
ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே"

—திருமூலர்.

---

* கூற்றுவன் தூதர் படைத்த வுடம்பு யாதனுசரீர மெனப்படும்

சூரியகாந்தக் கல்லிலுள்ள ஒளி, தன் கீழுள்ள பஞ்சைச் சுடமாட்டாது. சூரிய வொளியும் கண்ணாடியிற் சம்பந்தப்பட்டாற் றன் கீழுள்ள பஞ்சைச் சுடும். அஃதேபோல் மக்களின் இயற்கை யறிவு, தன் உயிரைப்பற்றியுள்ள அறியாமையைப் போக்காது. அத்துடன் கல்வி யறிவும் கலந்தால்தான் அறியாமை நீங்கும் மாணுக்கனது ஆணவமலம் தன்னறிவால் நீங்காமல் ஆசிரியன் பார்வை பட்டு நீங்கும். ஆகவே, கல்வி ஆசிரியன் போலாகும்.

"கல்லாதா னொட்பங் கழியநன் ருயினுங்
கொள்ளா ரறிவுடை யார்"

கல்வியை முறையாக நல்லாசிரியர்பால் கேட்காத ஒருவன், எவ்வளவு நுட்பமாகப் பேசினலும் கற்றவர் முன் சொல்லாடச் சோர்வு படும்.

"கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலர்மகன் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயாப் புகழ்கொண்டு
மற்றிவர் செய்யு முடம்பு" —நீதிநெறிவிளக்கம்,

பிரமன் நாவினும் புலவர் நாவினும் கலைமக ளிருப்பினும், மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான், பிரமன், உடலுயிர் களைப் புறவுலகத்திற் படைக்கின்ருன், புலவர்கள் உரை யுணர்வுகளை அகவுலகத்திற் படைக்கின்றனர். பிரமன் படைப் பில் அறுசுவை, புலவர் படைப்பில் ஒன்பது சுவை (நவரசம்) பிரமன் படைப்பில் மடமையும் மயக்கமும் மருளும் மடியும் மலிந்துள்ளன; புலவர்கள் படைப்பில் அறிவும் அருளும் அன்பும் ஆற்றலுஞ் சுரந்துள்ளன. பிரம்மன் படைப்பு துன்ப நோக்கில் தொடர்ந்து செல்வது; புலவர் படைப்பு இன்ப நோக்கில் எழுந்து வருவது. பிரமன் படைப்பு மறதி, கோபம், மதம், மாச்சரியம் மலிந்தெழுவது; புலவர் படைப்பு சிறிதும் வழுவின்றித் திருவருளை நாடி எழுவது. இவ்வாறு கவி சிருட்டிக்கும் புவி சிருட்டிக்கும் மாறுபாடுடையதே. வேதா வினும் இம்மேதாவிகள் மேலானவர்களே. பிரமன் படைக்கும் வெற்றுடம்பு விரைந்தழிந்தொழிகின்றது; புலவர்கள் படைக் கும் கவிகளும் நூல்களுமான புகழுடம்பு என்றும் அழியாது நின்று நிலவுகின்றது. பிரமன் படைத்த பூதவுடம்பு எத்தனையோ கோடிகளிறந்தன; புலவர்கள் படைப்பு, இளமை யெழில் குன்ருமலும், வளமை சுருங்காமலும் ஒளிரொளிவீசி

உயிர்களெல்லாம் உளமகிழ் கூர முருகன்போல் என்றும் இன்ப நிலையமாய் ஆயிரம் ஆண்டு கழியினும் அழியாது நின்று நிலவுகின்றது.

இதனால், சின்னாள் நின்று செத்தொழியும் மக்களைப் படைக்கின்ற பிரமதேவரினும், எந்நாளும் நிலைத்து இன்பம் பயக்கும் கவிகளைப் படைத்துதவும் புலவர்கள் சிறந்தவர்களல்லவா!

கலைமகளைப் பிரமன் முகத்தில் வைத்துள்ளார்; புலவர்கள் அகத்தில் வைத்துள்ளார். அவர் நாவில் வைத்து நாயகியாக நயந்துள்ளார்; இவர்கள் நாவிலும் பாவிலும் அப்பூவியலாளை வைத்து தேவியளாகப் போற்றுகின்றார். அப்பிரமன் காதலுற்றுக் களிக்கின்றார்; இப்புலவர்கள் போதமுற்றுத் துதிக்கின்றனர். அக் கலைமகள் பிரமனிடத்து அன்பு புரிகின்றாள்; புலவர்களிடத்து அருள் புரிகின்றாள். உற்ற நாயகனுடன் உரிமை கொண்டாடினும், பெற்ற தாய் பிள்ளைகளிடம் பேரன்பு காட்டுதல்போல், கலைத்தாய் கவிகளிடத்துக் கருணை காட்டிக் காத்து வருகின்றாள். சடவுலகத்தை அடலுடன் படைக்கும் பிரமனைக் காட்டிலும் அறிவுலகத்தை அழகுறவாக்கும் புலவர்கள் சிறந்தவர்களல்லவா? புலவர்கள் கலையொளி பரவவில்லையானால், இப் பூவுலகங் காடுமூடி கடுவிலங்குகள் உலவி இருளடர்ந்துவிடும். ஆதலால், கலங்கரை விளக்காகக் கவிகள் இலங்குகின்றனர். புலவன் காட்டியது உலகம். "ஓதாதார்க் கில்லை [illegible]ணர்வுபட வொழுக்கம்" "இளமையிற் கல்"

"ஒதுவ தொழியேல்" முதலிய மூதாட்டி ஔவைப் பிராட்டியின் பொன்மொழிகளைப் போற்றிக் கற்று, கற்றதனாலாய பயன் இறைவன் நற்றாள் தொழுதலே யானதாம். செந்தமிழை முறையாக நல்லாசிரியர்பாற் கேட்டு, அறநெறியில் நின்று யாவரும் பெரும் புலமை பெறவேண்டி, இக்கட்டுரையை முடித்துக்கொள்கின்றேன்.

---

# மெய்நெறி வெண்பா.

---

சுவாமி. அருணகிரிநாதர், கொளப்பாக்கம், சென்னை.

(முன் தொடர்ச்சி)

ஒருபர மின்றேல் உயிர்வாழ் விலையாம்

5. "விண்ணையலால் ஓசை வெளிப்படா மின்சாரம்
எண்ணையலாற் றீபம் எரிந்திடா—மண்ணையலால்
உண்ணும் உணவெங்கும் உண்டாகா ஒருயிரும்
அண்ணலின்றி வாழமுடி யா."

பரமிலா வுலகம் சிரமிலா வுடலாம்

6, "ஒன்றென்னும் எண்ணை ஒழிக்கிற் பலசுண்ணம்
நின்றுந் தொகையாகா நேர்மைபோல்—ஒன்றும்
பரம்பொருளை நீக்கிவிட்டுப் பார்த்தால் உலகம்
சிரமிழந்த தேகமொப்பாந் தேர்."

ஒருருத் தாங்கியே பேரருள் செயுமிறை

7. "ஒருவடிவம் ஓர்பெயரும் ஒன்றுமிலா வத்தோர்
திருவடிவேற் றேயருளைச் செய்யும்—உருவமிலாக்
காந்தவலி செம்பினது கம்பிவழி யாகவே
போந்து பயன்றருமா போல்.

உண்மை உணர உருவமே துணையாம்

8. "அரிஓம் முதலாய அக்கரங்கள் கற்க
வரிவடிவே காரணமாய் மன்னும்—அரிய
அருவவியல் ஆன்மவியல் ஆயுமட்டும் ஈசன்
உருவவழி பாடே யுறும்."

மாசிலாப் பிரமமே மாயையால் ஈசனும்

9. "எல்லையற்ற வாரிதிநீர் எங்கேனும் ஓர்பகுதி
கல்லைப்போற் கட்டிக் கரைவதுபோல்—சொல்லுதற்கே
ஓர்வடிவம் இல்லா உயர்கடவுள் மாயையினுல்
ஓர்வடிவம் ஏற்குமறை யும்."

நடிகனைப் போலிறை வடிவுக ளேற்றிடும்

10. "நாடகத்தில் ஓர்மனிதன் நாடும் பலவிதமாய்
வேடந் தரித்து விளங்குதல்போல்—நாடும்
உலகாய் உயிராய் உயர்பரமாய் ஐயன்
அலகில் நடம்புரிவா னால்."

நிர்க்குணப் பொருளை நினைத்தலும் அரிதாம்

11. "பஞ்சேந் திரியத்தாற் பார்க்கப் படுபொருளே
நெஞ்சம் நினைக்குமலால் நிர்க்குணத்தை—எஞ்சாத
ஆகாயம் நோக்கிவிழித் தங்காந் திருக்கின்ற
யோகாலுங் காணவொண் ணாதோர்."

மெய்யனை யுணரப் பொய்யுமோர் ஏதுவாம்

12. "பொய்யாகச் செய்த புதுச்சேரி மாங்கனிதான்
மெய்யாங் கனியை விளக்குதல்போல்—வையமிசை
பண்ணிவைத் தெங்கும் பரவுந் திருவுருவம்
அண்ணல் நினைவூட்டு மால்."

சகுணமே நிர்க்குணம் தனிலொன் றுவிக்கும்

13. "நிர்க்குணமாம் வத்துவினை நியுணரு மட்டுமே
சற்குணனும் ஈசுரனைத் தான்றொழுமின்—கற்போர்
எழுதா மறையை எழுதிப் படித்தல்
பழுதாமோ நியுணர்ந்து பார்.



உ

சிவமயம்.

தமிழ் வாழ்க ! அருணெறி வளர்க !!

# தமிழ் நாட்டுத் துறவிகள் சங்கம்,

## திருவண்ணமலை:

---

அன்புடையீர் !

இச் சங்கம் எட்டாண்டுகளாக மிகச் சிரிய முறையில் நடைபெற்று வருவதை பெரும்பாலான அறிஞர் பெருமக்கள் அனைவரும் அறிந்ததேயாகும். சென்ற ஆண்டு மாநாடு திருவண்ணமலையில் "சக்தி விலாச சபா மண்டபத்தில்" பல்லாயிரக் கணக்கான மக்கள் கூட்டத்தில் நடைபெற்றது. ஒன்பதாவது மாநாடு வரும் கார்த்திகைத் திங்கள் 4-ம் நாள் (19–11–'53) வியாழக்கிழமை நடைபெற இருக்கின்றது, தற்கால நிலைமையில் ஒரு மாநாட்டை நடத்துவதென்பது பலர் ஒன்று கூடிச் செய்யவேண்டிய அரும்பெரும் காரியமாகும். இம் மாநாட்டை வெற்றிபெற நடத்துவதற்குத் தமிழ்நாட்டு அன்பர்கள் பங்கு கொள்வதுடன், தங்களாலியன்ற பொருளுதவியையும் மனமுவந்து அளித்து விழாவைச் சிறப்பிக்குமாறு அன்புடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

இங்ஙனம்,

தவத்திரு.
குக. சதாசிவ அடிகள்,
தலைவர், சங்கேந்தி,

சா. ந. சொருபானந்தன்,
செயலாளன்.

---

15—11—53 முதல் 19—11—53 வரை பிற்பகல் 4-மணி முதல் சமயச் சொற்பொழிவுகள் நிகழும்.



---

Printed by Rm, Natarajan Chettiar, at Pandian Press Chidambaram.
Edited and Published by Swami Gnanananda "Chinnamadam", Erumbur.